# A DESCRIPTIVE CATALOGUE

OF THE

# TAMIL MANUSCRIPTS

IN THE

## GOVERNMENT ORIENTAL MANUSCRIPTS LIBRARY, MADRAS

BY


M. RANGACHARYA, M.A., RAO BAHADUR,

PROFESSOR OF SANSKRIT AND COMPARATIVE PHILOLOGY, PRESIDENCY COLLEGE, AND CURATOR, GOVERNMENT ORIENTAL MANUSCRIPTS LIBRARY, MADRAS (RETIRED)

AND

KUPPUSWAMI SASTRI, M.A.

PROFESSOR OF SANSKRIT AND COMPARATIVE PHILOLOGY, PRESIDENCY COLLEGE, AND CURATOR, GOVERNMENT ORIENTAL MANUSCRIPTS LIBRARY, MADRAS


---

*Prepared under the orders of the Government of Madras.*

[illegible]

[illegible]

[illegible] 20.

Vol. 2—Itihāsa and Purāṇa, and Religion and Philosophy (Vaiṣṇavism).


MADRAS:

PRINTED BY THE SUPERINTENDENT, GOVERNMENT PRESS.

1916.

# CONTENTS.

## CLASS III—ITIHĀSA AND PURĀṆA.

### (1) *Itihāsa.*



### (2) *Purāṇa.*



### (3) *Māhātmya.*

## CLASS III—ITIHĀSA AND PURĀṆA—*cont.*

### (3) *Māhātmya—cont.*

Name of work.



## CLASS IV—DHARMAŚĀSTIRAM.



## CLASS V—RELIGION AND PHILOSOPHY.

### 1. Vaiṣṇavism—(*A*) *Divyaprabandham.*

CONTENTS

## CLASS V—RELIGION AND PHILOSOPHY—*cont.*

### 1. VAIṢṆAVISM—(*A*) *Divyaprabandham*—cont.



### (*B*) *Digests and Tracts.*

CLASS V--RELIGION AND PHILOSOPHY—*cont.*

(*B*) *Digests and Tracts*—cont.

## CLASS V—RELIGION AND PHILOSOPHY—*cont.*

(*B*) *Digests and Tracts*—cont.

CLASS V—RELIGION AND PHILOSOPHY—*cont*

(*B*) *Digests and Tracts*—cont.

## CLASS V—RELIGION AND PHILOSOPHY—*cont.*

### (*B*) *Digests and Tracts*—cont



### *Vaiṣṇava religious tracts—Supplemental.*



### (*C*) *Stōtras.*



### (*D*) *Biography and Pontifical History.*

CONTENTS

## CLASS V—RELIGION AND PHILOSOPHY—*cont.*

### (*D*) *Biography and Pontifical History*—cont.

# A DESCRIPTIVE CATALOGUE

OF THE

# TAMIL MANUSCRIPTS.

## VOLUME II.

---

## CLASS III.—ITIHĀSA AND PURĀṆA.

### 1. ITIHĀSA.

---

### No. 512. இராமாயணம், உத்தரகாண்டம்.

### IRĀMĀYAṆAM, UTTARAKĀṆḌAM.

Substance, palm-leaf. Size, 16¾ × 1½ inches. Pages, 316. Lines, 6-7 on a page. Character, Tamil. Condition, injured here and there. Appearance, old.

Complete.

By Oṭṭakkūttar. The tradition is that he and Kambar wrote poems based on the story of Rāma, having been directed thereto by Kulōttuṅgaśōḷan, who then reigned at Uraiyūr, but that Oṭṭakūttar tore away the first six Kāṇḍas fearing that they would be thrown into the shade by Kambar's masterly work. The Uttarakāṇḍa, which alone was preserved at the request of Kambar, supplements Kambar's work, and all the seven Kāṇḍas now go by the name of Kambarāmāyaṇa. A list of Paṭalas with the number of stanzas contained in each Paṭala is given at the end.

There is some difference in the number and the names of the Paṭalas, as also in the number of stanzas in each Paṭala, between this manuscript and the printed editions of the work.

**Beginning :**

ஒன்றாய்ப் பலவா யுளறாயில றாயு ளைப்போர்க
கன்றாகி யாமா யருவாயுரு வாகி மெய்ம்மை[க்]
குன்றாத ஞானக் (கொழுந்தாய்க்குண) மூன்ற றிந்து
நின்றானி யாவ னவனீள்கழ னெஞ்சில் வைப்பாம்.

*    *    *    *

கண்ணு ருலகிற் கருதார்குலக் கட்டை வாங்கித்
தண்ணுர் தருமந் தழைப்பத்தனிக் காவல் பூண்டு
மண்ணோர் வணங்க மதிவெண்குடை மே (னிழற்ற)
விண்ணோர்கள் போற்ற விராகவன் வீற்றி ருந்தான்.

**End:**

ஆழியான் கருடன் றோண்மே லயன்மறை யோதிப் போற்றச்
சூழியா னையின்மே லேறி யிந்திரன் றுதிக்க வெண்மைப்
பூழிவாம் மேனித் தேவர் பொன்னொடு புகழ்ந்து போற்றி
வாழிவா னவர்தின் றேத்த மருவிலை குண்டஞ் சார்ந்தான்.

வைகுண்டப்படலம் முற்றும்.

*  *  *  *

கனைகட லிலங்கையைக் கட்டழித்தரு
ளானகனன் கதையினை யன்பிற் கேட்பரேல்
மனைவியு மக்களும் வாழ்வும் நல்கிடும்
நினைவது முற்றிடு நிச்சய மிதே.

ஸ்ரீராம[ஒ]ஜயம்.

மாருதி முன்னிற்க.

இராமபத்திர சுவாமி இரட்சிக்க.

பிரமோதூதளுூ மாசிமீ 19உ சனிவார நாள் எழுதிமுடிந்தது.

(த-பு.)—

இஃது ஒட்டக்கூத்தப் புலவராற் செய்யப்பெற்றது; இராவணன் முன்னோர் வரலாறு முதலியவற்றையும், வாலி, சுக்ரீவன, அனுமான் முதலானோர் வரலாற்றையும் கூறுவது. இந்தப் பிரதியிற்பூர்த்தியாக இருக்கிறது.

| உத்தரகாண்டம் :— | ப. | செ. |
|---|---|---|
| (1) கோத்திரப்படலம் ... ... . | 1 | 64 |
| (2) அரக்கர் பிறப்புப்படலம் ... ... | 7 | 51 |
| (3) இலங்கை யழித்தபடலம் .. ... | 12 | 76 |
| (4) இராவணாதிகள் பிறப்புப்படலம் ... | 22 | 70 |
| (5) அளகாபுரிப் படலம் ... ... ... | 31 | 133 |
| (6) திக்கு விசயம் வரையெடுத்த படலம்... | 36B | 14 |
| (7) வேதவதி யனல் மூழ்கு படலம் ... | 38 | 20 |
| (8) மருத்தன் வேள்விப்ப லம் .. ... | 40 | 12 |
| (9) அனரண்யப்படலம் ... .. ... | 41B | 11 |
| (10) எமன்மேற் செல்படலம் (இதன் நடு வேட்டில் சுமார் 12 பாக்களில்லை). | 42B | 34 |

| | | | |
|---|---|---|---|
| (11) பாதாளஞ் செல்படலம் | ... ... | 46 | 7 |
| (12) வருணன் மேற் செல் படலம் | ... | 47 | 10 |
| (13) சூர்ப்பநகை சேர்படலம் | ... ... | 48B | 21 |
| (14) மதுவின் மேற்செல் படலம் ... | ... | 51 | 27 |
| (15) அரம்பைப் படலம் | .. ... ... | 55 | 35 |
| (16) தேவர்மேற் படைசெல் படலம் | ... | 59 | 74 |
| (17) கார்த்த வீரியன் மேற்செல் படலம்... | | 68 | 23 |
| (18) வாலிவாலாற் கட்டுண்(ட) படலம் ... | | 71 | 19 |
| (19) அனுமப் படலம் | ... ... ... | 74 | 74 |
| (20) வனம்புகு படலம் | ... ... ... | 82 | 96 |
| (21) இலவணன் வதைப்படலம் | ... ... | 95 | 110 |
| (22) சம்புகன் வதைப்படலம் | ... ... | 109 | 67 |
| (23) யாகப்படலம் ... | ... .. ... | 117 | 208 |
| (24) காந்தருவர் வதைப்படலம் | ... | 137B | 68 |
| (25) மறவிப் படலம் | ... ... ... | 144 | 57 |
| (26) முனிப்படலம் | ... ... ... | 149 | 19 |
| (27) வைகுண்டப் படலம் | ... ... | 151 | 75 |
| | | | 1,465 |

---

## No. 513. இராமாயணம், உத்தரகாண்டம.
## IRĀMĀYAṆAM, UTTARAKĀṆḌAM.

Substance, palm-leaf. Size, 16⅜ × 1½ inches. Pages, 271. **Lines**, 8 on a page. Character, Tamil. Condition, injured. **Appearance**, old.

Complete.

**Same as** the above.

Some stanzas in praise of Kambar and his Rāmāyaṇa **are** found given in the end.

(க-பு.)—

இது முன்பிரதி போன்றது; பூர்த்தியாக இருக்கிறது; இதில் "வைகுண்டப்படலம் முற்றும்" என்று முடித்த பிறகு, "இராகவன் கதையில்", "இறுவரம்பில்" என்ற முதலையுடைய பாடல்களும்,

"ஆதவன் புதல்வன் முத்தி யமலனை யளிக்கு மையன்
போதவ னிராம காதை புகன்றருள் புனிதன் மண்மேற்
கோதவஞ் சற்று மில்லாக் கொண்டன்மா றன்னை யொப்பான்
மாதவன் கம்பன் செம்பொன் மலரடி தொழுது வாழ்வாம்" ௩.

"மாதவ னிராமன் யாணை வகைத்திற முரைக்கில் ராக(க்)
கோதறு மமுத நல்லோர் கூறுவே தாந்த சாரங்
காதைகள் கவிகட் கெல்லாங் காவிய ராசன் சன்ம
வேதனை தீர்க்குங்கம்பன் விரித்தவிப் பனுவ லானே." ௪.

"வரைத்தகு புயத்தி ராமன் மலரடி தொழுவான் மீகி
நிரைத்திடு பொருள்க ளெல்லா நிரம்பிய வறிவிற் கம்ப
னுரைத்திடு பனுவ றன்னி லோரடி யொருசீ ரேனும்
விரித்துரைப் பவர்க ளந்த விண்டுவின் பதத்தர் தாமே" ௫.

"வாய்ந்தநான் மறையோன் வாக்கால் வடித்தவான் மீகி செஞ்
லாய்ந்தமுத் தமிழாற் கம்ப னமைத்தரா மாய ணத்தைத் [சொ
தோய்ந்துணர் வுடைய நீரார் தொல்வினைப் பிறவித் துன்பந்
தேய்ந்தறம் பொருள்வீ டென்னுஞ் செம்மையார் நன்மை
[யாரே" ௬.

இக்கவி ௩-ம் கம்பர்மேற்கவி.

ஸ்ரீராம[ெ]ஜயம்.

"கரைபொரு காண்ட மேழு கதைகளா யிரத்தெண் ணூறே
டுரைதரு விருத்தம் பன்னீ ராயிரத் தொரு . . . றுபத்தெட்டு
. . . . . . . . . . . . . . . . . . . . . . .
வரமுறு கம்பன் சொன்ன வண்ணமு மெண்பத் தேழே" ௧.

என்ற பாடல்களும் காணப்படுகின்றன.

---

## No. 514. கம்பராமாயணம்.
## KAMBARĀMĀYAṆAM.

**Substance**, palm-leaf. Size, $13\frac{3}{4} \times 1\frac{1}{4}$ inches. Pages, 1492. Lines, 10 on a page. Character, Tamil. Condition, 1st volume good, 2nd volume injured. Appearance, old.

Complete in two volumes.

A classical poem in six Kāṇḍas on the life and adventures of Rāma: by Kambar. It differs from the Rāmāyaṇa of Vālmīki in certain details. The names of the Paṭalas comprised in each of the Kāṇḍas are given in the end, as they differ in some places from their names as given in the printed editions.

**Beginning**.

தருகை நீண்ட தயரதன் றன்றரு
மிருகை வேழத் திராகவன் றன்கதை
திருகை வேலைத் தரைமிசைச் செப்பிடக்
குருகை நாதன் குரைகழல் காப்பதே.

* * * *

உலகம் யாவையுந் தாமுள வாக்கலு
நிலைபெ றுத்தலு நீக்கலு நீங்கலா
வலகி லாவிளை யாட்டுடை யாரவர்
தலைவ ரன்னவர்க் கேசர ணாங்களே.

*   *   *   *

ஆற்றுப்படலம்.

ஆச லம்புரி யைம்பொறி வாளியுங்
காச லம்புமு லையவர் கண்ணெனும்
பூச லம்புநெ றியின்பு றஞ்செலாக்
கோச லம்புனை யாறது கூறுவாம்.

நீற ணிந்தக டவுணி றத்தவா
னாற ணிந்துசென் றார்கலி மேய்ந்தகிற்
சேற ணிந்தமு லைத்திரு மங்கைதன்
வீற ணிந்தவன் மேனியின் மீண்டவே.

**End :**

உம்பரே முதலா வுள்ள வுலகமோ ரேழு மேழு
மெம்பிரா னிவனென் றேத்தி யிறைஞ்சின ரேவல் செய்யத்
தம்பிமா ருடனே நாளுந் தயாயிகுந் தவத்து ளோரு
மிம்பரா னயரும் வாழ்த்த விராகவ னுலகங் காத்தான.

*   *   *   *

இவ்வண்ணத் துலகோர்க் கெல்லா
மிடர்தருந் துயரந் தீர்த்துப்
பொய்வண்ண மில்லா வண்ணம்
யாவர்க்கும் புகலா [வ](ம)ண்ணல்
லைவண்ணத் த(ர)வப்
பாயற் பாற்கட னீங்கி வந்த
மைவண்ணத் திராமன் காத்தான்
மனுநெறி முறையான் மண்ணை. 23[illegible]

மறிகடன் ஞாலந் தன்னில் வடசொலுந் தமிழும் வல்லோர்
முறுவலுக் குரிய தாக முயன்றுநான் மொழிந்த விந்நூற்
சிறுமை யை நோக்கார் தங்கள் பெருமையே சிந்தை செய்வா
ரறிவுடை யோர்கட் கெல்லா மடைக்கல மாகு மன்றே. 24[illegible]

**Colophon :**

திருமுடி சூட்டுப்படலம் முற்றும்.
ஆகப்படலம் [illegible]க்கு (விருத்தம்) [illegible].
யுத்தகாண்டம் முற்றும்.

ஆக, காண்டம் 6-க்குப் படலங்கள் 111-க்குத் திருவிருத்தங்கள் 10,558.

இது,

திருமயிலையைச் சார்ந்த இராயப்பேட்டையிலிருக்கும் வல்லிபுரம் அழகப்ப முதலியார் குமாரனாகிய பரசுராமன் எழுதியது.

சௌமியளு தைமீ ௰௳ சோமவாரம் எழுதி நிறைவேறியது.

முற்றிற்று.

(ரு-பு.)—

இராமாயணம் எழுகாண்டங்களுள், கம்பநாற் செய்யப்பெற்றன முதலாறு காண்டங்களுமே ; அவை இந்தப்பிரதியிற் பூர்த்தியாகவுள்ளன ; இந்தப்பிரதி இரண்டு சம்புடங்களாகக் கட்டப்பட்டிருக்கின்றது ; முதற் சம்புடத்தில் முதலைந்து காண்டங்களும்,ஆறுவது காண்டத்தின் 5 படலங்களும் உள்ளன ; இரண்டாவது சம்புடத்தில் ஆறுவது காண்டத்தின் மற்றப்படலங்கள் உள்ளன ; இரண்டாவது சம்புடம் சிதிலமாக இருக்கிறது ; இதன் இறுதியிற் குறித்த படலங்கள் 111 - ன் பெயர்களாவன :—

பால காண்டம்.

1. ஆற்றுப்படலம்.
2. நாட்டுப்படலம்.
3. நகரப்படலம்.
4. அரசியற்படலம்.
5. திருவவதாரப்படலம்.
6. கையடைப்படலம்.
7. தாடகைப்படலம்.
8. வேள்விப்படலம்.
9. அகலிகைப்படலம்.
10. மிதிலைக்காட்சிப்படலம்.
11. குலமுறைகிளத்துபடலம்.
12. கார்முகப்படலம்.
13. எழுச்சிப்படலம்.
14. வரைக்காட்சிப்படலம்.
15. பூக்கொய்படலம்.
16. நீர்விளையாட்டுப்படலம்.
17. உண்டாட்டுப்படலம்.
18. எதிர்கொள்படலம்.
19. உலாவியற்படலம்.
20. கோலங்காண்படலம்.
21. கடிமணப்படலம்.
22. பரசுராமப்படலம்.

அயோத்தியா காண்டம்.

23. மந்திரப்படலம்.
24. மந்தரைப்படலம்.
25. கைகேயிசூழ்வினைப்படலம்.
26. நகர்நீங்குபடலம்.
27. தைலமாட்டுபடலம்.
28. கங்கைப்படலம்.
29. வனம்புகுபடலம்.
30. சித்திரகூடப்படலம்.
31. பள்ளியடைப்படலம்.
32. ஆறுசெல்படலம்.
33. குகப்படலம்.
34. திருவடிசூட்டுபடலம்.

## ஆரணிய காண்டம்.

35. விராதன்வதைப்படலம்.
36. சரபங்கர் பிறப்பு நீங்குபடலம்.
37. அகத்தியப்படலம்.
38. சடாயுகாண்படலம்.
39. சூர்ப்பணகைப்படலம்.
40. கரதூஷணத்திரிசிரர் வதைப்படலம்.
41. மாரீசன்வதைப்படலம்.
42. சடாயுவதைப்படலம்.
43. அயோமுகிப்படலம்.
44. கவந்தன்வதைப்படலம்
45. சவரி (பிறப்பு) நீங்குபடலம்.

## கிட்கிந்தா காண்டம்.

46. பம்பாநதிப்படலம்.
47. மராமரப்படலம்.
48. துந்துபிப்படலம்.
49. கலன்காண்படலம்.
50. வாலிவதைப்படலம்.
51. அரசியற்படலம்.
52. கார்காலப்படலம்.
53. கிட்கிந்தைப்படலம்.
54. தானைகாண்படலம்.
55. நாடவிட்டபடலம்.
56. பிலநீங்குபடலம்
57. ஆறுசெல்படலம்.
58. சம்பாதிப்படலம்.
59. மகேந்திரப்படலம்.

## சுந்தர காண்டம்.

60. கடல்தாவுபடலம்.
61. ஊர்தேடுபடலம்.
62. காட்சிப்படலம்.
63. நிந்தனைப்படலம்.
64. உருக்காட்டுப்படலம்.
65. சூடாமணிப்படலம்.
66. வனபங்கப்படலம்.
67. கிங்கரர்வதைப்படலம்.
68. சம்புமாலிவதைப்படலம்.
69. பஞ்சசேனாதிபதிகள் வதைப்படலம்.
70. அக்ஷ[ய]குமாரன் வதைப்படலம்.
71. பாசப்படலம்.
72. பிணிவீட்டுப்படலம்.
73 ஊர்சுடுபடலம்.
74. திருவடிதொழுதபடலம்.

## யுத்த காண்டம்.

75. கடல்காண்படலம்.
76. மந்திரப்படலம்.
77. இரணியன்வதைப்படலம்.
78. விபீஷணன் அடைக்கலப் படலம்.
79. இலங்கைகேள்விப்படலம்.
80. வருணனடைக்கலப்படலம்.
81. சேதுப்படலம்.
82. ஒற்றுக்கேள்விப்படலம்.
83. இலங்கைகாண்படலம்.
84. கோபுரப்படலம்.
85. மகுடபங்கப்படலம்.
86. அணிவகுப்புப்படலம்.
87. அங்கதன் தூதுப்படலம்.
88 இராவணன் முதனாள்யுத்தப்படலம்.

யுத்த காண்டம்—தொடர்ச்சி.

89. கும்பகர்ணன்வதைப்படலம்.
90. மாயாசனகப்படலம்.
91. அதிகாயன்வதைப்படலம்.
92. நாகபாசப்படலம்.
93. படைத்தலைவர் வதைப்படலம்.
94. மகரக்கண்ணன்வதைப்படலம்.
95. பிரமாஸ்திரப்படலம்.
96. சானகிகளங்காண்படலம்.
97. மருத்துப்படலம்.
98. களியாட்டுப்படலம்.
99. மாயாசீதைப்படலம்.
100. நிகும்பலைப்படலம்.
101. இந்திரசித்துவதைப்படலம்.
102. இராவணன் சோகப்படலம்.
103. படைகாட்டுப்படலம்.
104. மூலபலவதைப்படலம்.
105. வேலேற்[றுப்](ற)படலம்.
106. வானரவீரர் களங்காண்படலம்.
107. இராவணன் களங்காண்படலம்.
108. இராவணன் தேரேறுபடலம்.
109. இராவணன்வதைப்படலம்.
110. மீட்சிப்படலம்.
111. திருமுடி சூட்டுப்படலம்.

அச்சுப்புத்தகங்களிற் படலப்பெயர்கள்கூட மாறுபட்டிருந்ததால் இவை இங்கே எழுதப்பெற்றன.

"கழுந்தராய்" என்ற முதலையுடைய பாட்டால், இந்நூலாசிரியர் நாள் ஒன்றுக்கு 700 கவிபாடினா ரென்பதும், "எண்ணிய சகாத்தம்" என்ற முதலையுடைய பாடலால் சகம், 807-ம் ௵த்தில் ஸ்ரீரங்கநாதன் சந்நிதியில் இந்நூல் அரங்கேற்றப்பெற்றதென்பதுந் தெரிகின்றன; இங்குச்சகம் என்றது சாலிவாகனசகத்தை யென்றும், ரங்கர் என்றது ஸ்ரீ ரங்கத்தெம்பெருமானை யென்றும் பெரியோர் துணிந்துரைக்கின்றனர்.

---

## No. 515. கம்பராமாயணம்.

## KAMBARĀMĀYAṆAM.

Substance, palm-leaf. Size, 17½ × 1⅜ inches. Pages, 810. Lines, 9 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

The first 5 Kāṇḍas complete.

Same work as the above.

(கு-பு.)—

இது முன்பிரதிபோன்றது; இதில் முதலைந்து காண்டங்கள் பூர்த்தியாக உள்ளன.

## No. 516. கம்பராமாயணம்.

## KAMBARĀMĀYAṆAM.

Substance, palm-leaf. Size, $16\frac{3}{4} \times 1\frac{1}{8}$ inches. Pages, 792. Lines, 8 to 9 on a page. Character, Tamil. Condition, good. Appearance, old.

The first five Kāṇḍas only.

Same work as the above.

(த-பு.)—

இது முன்பிரதி போன்றது ; இதில் முதலைந்து காண்டங்கள் பூர்த்தியாக உள்ளன.

---

## No. 517. கம்பராமாயணம்.

## KAMBARĀMĀYAṆAM.

Substance, palm-leaf. Size, $15\frac{1}{2} \times 1\frac{1}{4}$ inches. Pages, 232. Lines, 6 to 7 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.

Contains the Ayōdhyākāṇḍa, incomplete.

Same work as the above.

(த-பு.)—

இது முன்பிரதியைப்போன்றது ; இந்தப் பிரதியில் அயோத்தியா காண்டமுள்ளது ; அதிலும் முதலில் 45 பாடல்களும், கிளைகண்டு நீங்கு படலத்தில் 80 க்கு மேற்பட்ட பாடல்களும் இல்லை.

---

## No. 518. கம்பராமாயணம்.

## KAMBARĀMĀYAṆAM.

Substance, palm-leaf. Size, $16\frac{3}{8} \times 1$ inches. Pages, 614. Lines, 6 to 9 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Contains the Āraṇyakāṇḍa (the first 23 stanzas being wanting), Kiṣkindhākāṇḍa, and Sundarakāṇḍa (the last 927 stanzas being wanting).

Same work as the above.

(கு-பு.)—

இது முன்பிரதிபோன்றது ; இதில் ஆரணியகாண்டமும், கிஷ்கிந்தா காண்டமும், சுந்தரகாண்டமுமுள்ளன ; அவற்றுள், ஆரணியகாண்டத்தில் முதல் 23 பாடல்களும், சுந்தரகாண்டத்தில் இறுதி 927 பாடல்களும் இல்லை.

---

## No. 519. கம்பராமாயணம். KAMBARĀMĀYAṆAM.

Substance, palm-leaf. Size, 16¾ × 1 inches. Pages, 310. Lines, 5 to 7 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Sundarakāṇḍa complete. Certain stanzas are found re-copied in the end.

Same work as the above.

(கு-பு.)—

இது முன்பிரதிபோன்றது ; இதில், சுந்தரகாண்டம் ஒன்றே இருக்கிறது ; பூர்த்தியாகவுள்ளது ; 64 என்ற எண்போடப்பட்ட 51 ஆவது ஏடு ஒடிந்துபோயிற்று ; இறுதியிலுள்ள 4 ஏடுகளில், இக்காண்டத்தின் இடையேயுள்ள பாகம் இரண்டாவது பிரதியாக எழுதப்பட்டிருக்கிறது.

---

## No. 520. கம்பராமாயணம். KAMBARĀMĀYAṆAM.

Substance, palm-leaf. Size, 14¼ × 1¼ inches. Pages, 720. Lines, 6–10 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.

Begins on fol. 1*a*. The other work herein is Śaranūl 3619.

Kiṣkindhākāṇḍa, Sundarakāṇḍa, Uttarakāṇḍa : all incomplete.

Same work as the above.

(கு-பு.)—

இதில் கிஷ்கிந்தாகாண்டமும், சுந்தரகாண்டமும், உத்தரகாண்டமும் உள்ளன ; அவற்றுள் முன் 2 காண்டமும் முன் பிரதிபோன்றவை ; இறுதி ஒரு காண்டமும் 512-ம் நெ. பிரதிபோன்றது ; கிஷ்கிந்தா காண்டம் முதலில் 10 பாடல்களும், மற்றுமுள்ள காண்டங்களில் இடையிடையே சில பாடல்களும் இல்லை. படலப் பெயர்களிலும் பேதமுண்டு.

## No. 521. கம்பராமாயணம்.
## KAMBARĀMĀYAṆAM.

Substance, palm-leaf. Size, 17¾ × 1¼ inches. Pages, 108. **Lines,** 7 on a page. Character, Tamil. Condition, **much injured.** Appearance, old.

Same as the above.

Contains only scattered portions of the Bālakāṇḍa.

(த-பு.)—

இது முன்பிரதிபோன்றது ; இதில் பாலகாண்டத்திலுள்ள பல ஏடுகள் முன்பின்னாக மாறுபட்டுக் கோக்கப்பட்டிருக்கின்றன ; சில ஏடுகளாவது தொடர்ச்சியாக இல்லை ; அன்றியும் திவ்வியப்ரபந்தமெழுதப் பெற்றுள்ள சில ஏடுகளும் கலந்து கோககப்பட்டிருக்கின்றன.

---

## No. 522. கம்பராமாயணம்.
## KAMBARĀMĀYAṆAM.

Substance, palm-leaf. Size, 18 × 1¼ inches. Page, 536. Lines, 9 to 10 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Yuddhakāṇḍa only ; leaves 215 to 218 are wanting.

Same work as the above.

(த-பு.)—

இது முன் பிரதிபோன்றது ; இதில் யுத்தகாண்டம் மாத்திரம் உள்ளது. இதில் இடையிடையே சில ஏடுகள் செல்லரிப்புண்டும் முரிந்தும் உள்ளன. 215, 216, 217, 218 எண்ணுள்ள ஏடுகளில்லை ; ஆதலின் அதிலடங்கிய 81 பாடல்களுமில்லை. இதில் சில படலப் பெயர் மாறியுமுள்ளன.

---

## No. 523. கம்பராமாயணம்.
## KAMBARĀMĀYAṆAM.

Substance, palm-leaf. Size, 17 × 1⅜ inches. Pages, 744. **Lines,** 6 to 9 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Contains the Yuddhakāṇḍa.

Same work as the above.

(கு-பு.)—

இது முன்பிரதிபோன்றது ; இதில் யுத்தகாண்டம் ஒன்றே இருக்கிறது ; பூர்த்தியாக உள்ளது ; இறுதியிலுள்ள ஓரேட்டில் இடையிடையே விட்டுப்போன சில பாடல்கள் எழுதப்பெற்றிருக்கின்றன.

---

## No. 524. கம்பராமாயண சங்கோத்தரவிருத்தி.

## KAMBARĀMĀYAṆAŚAṄKŌTTARAVIRUTTI.

Substance, palm-leaf. Size, 15 × 1¾ inches. Pages, 17. Lines, 9 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Begins on fol. 24*a*. The other works herein are Śaivasiddhānta-prakāśakkaṭṭaḷai 1*a*, Eḍuttennum śollukkiṭṭa-vairakkuppāyam 12*a*, Arum seyyuḷ with commentary 32*b*, Tirukkōvaiyārurai 51*a*.

Complete.

Herein Śivajñānamunivar of the Tiruvāḍuturai Mutt points out certain apparent flaws or defects in the composition of the first stanza of the Kambarāmāyaṇa, and then explains them away showing that what appear to be flaws go really to contribute to the poetic excellence and merit of that stanza.

**Beginning:**

நாடிய பொருள்கை கூடும் ஞானமும் புகழு முண்டாம்
வீடுயர் வழிய தாக்கும் வேரியங் கமலை நோக்கும்
நீடிய வரக்கர் சேனை நீறுபட் டொழிய வாகை
சூடிய சிலையி ராமன் றோள்வலி கூறு வோர்க்கே.

இதனுட் சங்கையும் உத்தரமும் வருமாறு ; சங்கை சிறிது காட்டுதும். நாடிய பொருளெனவே யெல்லா மடங்குதலின் ஞானமும் புகழுமுண்டாமெனவும், வீடுயர் வழியதாக்குமெனவும், வேரியங் கமலைநோக்குமெனவுங் கூறுதல் கூறியது கூறலேயாம். 'இனி' ஈண்டுக் கூறிய நாடிய பொருண்முதல வாயவற்றைத் தருமிராமனை யவை தருதற்குரிய சத்துவகுணத் தொழிலான் விசேடித்துக் கூறாது, நீடிய வரக்கர் சேனை நீறுபட் டொழிய வாகை சூடிய சிலையிராம னென வுருத்திரச்சுவை தோன்றவேனைக்குணத்தொழிலான் விசேடித்துக் கூறுதல் சிறிதுஞ் சிறப்பின்றும். . . . . . .

* * * *

நீறுபட்டொழியவென அமங்கலச் சொல்லை வைத்தலும் வழுவாம். ஆதலின் இப்பாட்டு முழுதுங் குற்றமேயாமெனின் அற்றன்று. இனிச் சங்கை நீரப்பொருள் சிறிது காட்டுதும். ஒரு பொருளில் நாட்டமுற் றிருப்போர்க்கு அக்காலத்து வேறோர் பொருள் கைகூடின் அப்பொரு ளில் அவர்க்கு விருப்பஞ் செல்லாதாம். அந் நாடிய பொருள்கை கூடின் மகிழ்ச்சி மேன்மேலுண்டாமாகலின் அவ்வாறு மகிழ்ச்சியுண் டாம்படி நாடிய பொருளே யெளிதிற் கிடைக்குமென்பார் நாடிய பொருள்கைகூடுமென்றார். வேண்டுவோர் "வேண்டுவதே யீவான் கண்டாய்", "மனத்திருந்த கருத்தறிந்து முடியாய் நீயே", "எண் ணிய வெண்ணியாங் கெய்தும்", "உள்ளிட்டதெல்லா முடனெய்தும்" என்பன வெல்லா மிக்கருத்தே பற்றி வந்தனவென்க.

**End:**

சொற்பொரு ளொழிய வுள்ளுறை[ப்] பொரு ளியாதெனிற் கூறு தும்; கூறுவோர்க்கென்றதனு லிராமன்றேள்வலியை யிக் கம்பராமா யண முணவாமெனக் காப்பியப் பயன்கூறியவா றிப்பாட்டின கருத் தென இதனையே பாயிரத்துள் விளங்கக் கூறுப. இங்ஙன மொருவா று சுருக்கியுரைத்தாம்; இன்னும் விரிப்பிற் பெருகும்.

சிவமயம்.

(கு-பு.)—

இது, திருவாவடுதுறையாதீனம் சிவஞானமுனிவரால் இயற்றப் பட்டது.

இவரது மதம்—சைவம்.
காலம்—117 வருடஙகட்குமுன்.
இவர் மாணுக்கர்— கச்சியப்ப முனிவர் முதலியோர்.
இவர் துறவி, வடமொழியிலுந் தேர்ந்தவர்.

இவரியற்றிய வேறு நூல்கள்—

1. அமுதாம்பிகைப் பிள்ளைத் தமிழ் (குளத்தூர்).
2. இலக்கண விளக்கச் சூருவளி.
3. இளசை பதிற்றுப்பத்தந்தாதி.
4. எடுத்து என்னுஞ் சொல்லுக் கிட்டவைரக்குப்பாயம்.
5. கம்பரந்தாதி.
6. கலசைபதிற்றுப் பத்தந்தாதி.
7. கலசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ்.
8 காஞ்சிபுராணம் (1-ம் பாகம்) குளத்தூர்பதிற்றுப் பத்தந் தாதி.
9. சித்தாந்தப் பிரகாசிகை, மொழிபெயர்ப்பு.
10. சிவஞான சித்தியார் சுபக்ஷ பொழிப்புரை.
11. சிவஞானபோதவிருத்தியுரை (திராவிட மகாபாஷ்யம்).
12. சிவஞான போதச்சிற்றுரை,

13. சிவதத்துவ விவேகமொழிபெயர்ப்பு.
14. சிவசம்வாத உரை மறுப்பு.
15. சுலோக பஞ்சகம்.
16. செப்பறைப்பதி அகிலாண்டேசுவரிபதிகம்.
17. சோமேசர் முதுமொழி வெண்பா.
18. தருக்க சங்கிரகம்.
19. தருக்கசங்கிரகதீபிகை (அன்னம்பட்டீயம்).
20. திருநாமக்கோவை.
21. திருமூல்லைவாயிலந்தாதி.
22. திருவேகம்பரந்தாதி.
23. திருவேகம்பராநந்தக் களிப்பு.
24. தொல்காப்பியச் சூத்திரவிருத்தி.
25. நன்னூல்விருத்தியுரைத்திருத்தம்.
26. பஞ்சாக்கரமாலை.
27. மறுப்பின் மறுப்பு.

---

## No. 525. குசலவர்கதை.
## KUŚALAVARKADAI.

Substance, palm-leaf. Size, 5⅝ × 1⅓ inches. Pages, 90. Lines, 9 to 10 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Begins on fol. 17*a*. The other work herein is Tirumuruhāṟṟuppaḍai 1*a*.

Complete.

Gives a short account of the banishment of Sīta to the forest, the birth of her twin sons Kuśa and Lava, and Rāma's subsequent union with his wife and children.

By the son of Murāri Śrīraṅgarāyar of Kaḍaśinagar.

**Beginning:**

விருத்தம்.

அரியுமா யயனு மா[கி](கி) யா(னு)மா யாதி மூலம்
பெரியமா வரங்க[ண்](ள்) தந்த பெண்ணுமா யானு மாகிக்
கரியமா லழகன் சோலை மலையில்வாழ் கண்ணன் பாதம்
தெரியவே காசி னிக்குள் விருத்தமாய்ச் செப்பு வேனே.

வேறு.

மாலவன் குசலவன் கதைவை யத்திலே
சீலமேல் விருத்தமாய்த் தெரியச் செப்பவே
மூலவெண் டாமரை மாது மொய்குழல்
சாலவென் னவினில் தாப ரிப்பதே.

* * * *

**End:**

> **கோசல ராமன்** பெற்ற **குசலவன்** கீர்த்தி தன்னை
> நேசமாய்க் கற்ற பேரும் நீதியாய்த் தரித்த பேரு
> மாசையாற் படித்த பேரும் யாவரும் வாழி வாழி
> தேசமும் வாழி வாழி செல்வமாய் வாழி வாழி. (206)

(குசலவன்கதை முகிந்தது, முற்றும்.)

.................... ....படித்துப்போட்டுக் கொடுத்துவிடவும்.

(கு-பு.)—

இது, கடசிநகர் மூரரரி சீரங்கராயர் குமாரரும் சோலைமலையழகரிடத்துப் பத்தியுள்ளவருமாகிய ஒருவராற் செய்யப்பட்டது; 206 விருத்தங்களையுடையது; செய்யுள் நடை சிறந்ததன்று; இந்தப் பிரதியிற் பூர்த்தியாக இருக்கிறது.

---

## No. 526. பாரதவெண்பா, உரையுடன்.

## BHĀRATAVEṆBĀ WITH PROSE.

Substance, paper. Size, 10¾ × 8¼ inches. Pages, 398. Lines, 20 on a page. Character, Tamil. Condition, good. Appearance, old.

**Contains** only **772 stanzas** out of **12,000 stanzas.**

A literary work in verse and prose based on the Mahābhārata The prose portion, in addition to continuing the narrative, briefly recaptulates in some places what is given in verse. It is one of the works known as—உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள் Uraiyiḍaiyiṭṭapāṭṭuḍaicceyyuḷ. The author of the work is Perundēvanār and is known as Bhāratampāḍiya Perundēvanār (பாரதம்பாடிய பெருந்தேவனார்) in order that he may be distinguished from Kavisāgara Perundēvanār and the Perundēvanār who wrote a commentary on the Vīrasōḻiyam. He is known to be one of the poets who belonged to the time of the Kaḍaiccaṅgam.

**Beginning:**

> ஓத வினையகலு மோங்கு புகழ்பெரு[க்]குங்
> காதற் பொருளனைத்துங் கைகூடுஞ்—சீதப்
> பனிக்கோட்டு மால்வரைமேற் பாரதப்போர் தீட்டுந்
> தனிக்கோட்டு வாரணத்தின் றாள்.

பொத்தகமு ஞானத்து முத்திரையும் பொற்பளிங்கும்
வைத்த கமண்டலமும் வன்னிகையு—முத்து
வடங்கொண்ட பூண்முலையாள் வந்தென் மனத்தே
யிடங்கொண்டா ணீங்கிற் றிடர்.

* * * *

அரவுயர்த்தோன் சொன்ன வவதியாண் டெல்லாம்
புரவுயர்த்தோன் கானத்து ணீக்கி—முரசுயர்த்த
வேல்வேந்தர் வந்து வெளிப்பட்டார் மற்றிளைய
கோல்வேந்த ரோடுங் குறித்து. (4)

எ-து, தருமபுத்திரனும் தம்பிமாரும் துரியோதனனுடன் சபா மண்டபத்தில் இசைந்தபடியே பன்னிரண்டு சம்வச்சரம் காடுறைந்து, ஓராண்டு கரந்துறைந்து, தங்கள் சுற்றக்கிழாத்தோடும் வந்து விராடபுரத்து வெளிப்பட்டாரென்றவாறு.

**End :**

மாற்றரிய மாமதலை மன்னவர்க ளேவருக்குந்
தேற்ற வரிய செழுமணியா—னூற்றுவர்க்குக்
காலனாய்த் தோன்றில் கறைமிடற்றான் கொன்றையினால்
மேலவனாய் வீழ்ந்தான் விரைந்து. (772)

(கு-பு.)—

இது, கடைச்சங்கப் புலவர்களில் ஒருவராகிய பெருந்தேவனார் என்பவரால் இயற்றப்பட்டது. பாட்டும் உரையும் கலந்துள்ளது. நடை சிறந்தது. இந்நூலின் செய்யுட்டொகை பன்னீராயிரத்துள் இக்காலத்தில் ஏறக்குறைய எண்ணூறு செய்யுட்களே கிடைக்கின்றன. இந்நூல் பெருந்தேவனார் பாரதமென்றுங் கூறப்படும். இது, நச்சினார்க்கினியர்முதலிய உரையாசிரியர்களால் சிறந்த மேற்கோளாக எடுத்தாளப்பட்ட நூல்களுள் ஒன்று.

---

## No. 527. வில்லிபுத்தூரார் பாரதம்.

## VILLIPUTTŪRĀR BHĀRATAM.

Substance, palm-leaf. Size, 17 × 1¼ inches. Pages, 733. Lines, 7 to 9 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Contains 1 to 9 Parvas.

The author is Villiputtūrār, a Vaiṣṇava Brahmin, who lived in Saniyur, a village in the Cuddalore district. He composed the

first ten Parvas only. Nallā Piḻḻai utilised most of the stanzas of Villiputtūrār in his 'Bhāratam' and completed it by composing the remaining eight Parvas. The number of stanzas contained in the respective Sargas of each Parva is given in detail in the end.

On fly leaf.

காளயுக்தி௵ ஆடிமீ 15௳ சுக்கிரவாரநாள் எழுத ஆரம்பித்தது.

**Beginning :**

ஓத வினையகலு மோங்குபுக ழேபெருகுங்
காத லருளனைத்துங் கைகூடும் - சீதப்
பனிக்கோட்டு மால்வரைமேற் பாரதப்போர் தீட்டுந்
தனிக்கோட்டு வாரணத்தின் றாள்.

நீடாழி யுலகத்து மறைநாலொ டைந்தென்று நிலைநிற்கவே
வாடாத தவவாய்மை முனிராசன் மாபாரதஞ்சொன்னநா
ளேடாக வடமேரு வெற்பாக வங்கூரெ ழுத்தாணிதன்
கோடாக வெழுதும்பி ரானைப்ப ணிந்தன்பு கூர்வாமரோ.

*    *    *    *

ஏழ்பெ ருங்கடன் மாநில மெங்குநல் லறமே
சூழ்க வண்டமி ழோங்குக தேங்குக கருதி
வீழ்க பைம்புனல் விளங்குக வளங்கெழு மனுநூல்
வாழ்க வன்புடை யடியவர் மன்னுமா தவமே.

கன்ன பாகமெய் களிப்புறத் தொல்கதை முன்னுஞ்
சொன்ன பாவலன் றுகளறு சுயன்றிருத்(காதை)
யன்ன பாரதந் தன்னையோ ரறிவிலே னுரைப்ப
தென்ன பாவமற் றென்னையின் றென்சொலா துலகே.

**End :**

தேனுலவு தண்டுளவ மாயர்திரு வுள்ளந்
தானுலவு சூட்சியிசை தரணிவள மானின்
மேனுலவு பாரமுமு டித்துவிடை யோன்றன்
பானுலவு தீவிரகலி தீர்த்தபர மாயன்.

ஆதிமறை வேதனுட னைகுலமுந் தீர
வாதிபதி னெட்டுதினப் பாரத முடித்த
நீதிவளர் தர்மரு[ட](டை) நீண்முடியின் மீது
சோதிபெறு நன்[மௌ](ம)வுலி சூட்டினர்வி யாதர்,

திங்கள்வளர் மும்மழை சிறந்துமிகு தேச
மெங்குமிக வெயெழிலி யோங்கியிட வினிது
சங்குவணி சக்கரத்தாமனுடன் வாழ்க
பொங்கிவளர் குந்திதரு புதல்வர்களும் வாழ்க.

## Colophon:

[மௌ](ம)வுலி சூ டு[ச்]சருக்கம் முற்றும். ஸ்ரீகிருஷ்ண சகாயம்.

கா யுக்தி வருஷம் பங்குனிமீ 29உ, கோயம்பேடு பட்டால முடை யார், கோமுனிமகரிஷிகோத்திரம், போதாயன சூ[ஸ்](த்)திரம் கா ளிங்கராயப் பிள்ளை (?) ஸ்ரீரங்கம்மாள் குமாரன், தாண்டவராயன் எழுதிமுடிந்தது முற்றும். ஸ்ரீராம சந்திரசுவாமி சகாயம்.

| | Fol. Number. | Total No. of Stanzas. |
|---|---|---|
| பாயிரம். | 2 | 22 |
| I. ஆதி பருவம்— | | — |
| (1) குருகுலச் சருக்கம் ... ... ... | 4a | 153 |
| (2) சம்பவச் சருக்கம் ... ... ... | 16a | 120 |
| (3) வாரணாவதச் சருக்கம் ... ... | 27a | 136 |
| (4) வேத்திரகீயச் சருக்கம் ... .. | 36a | 64 |
| (5) மாலையிட்ட சருக்கம் .. ... | 41a | 112 |
| (6) தீர்த்தயாத்திரைச் சருக்கம் ... . | 50a | 137 |
| (7) காண்டவ தகனச் சருக்கம் ... ... | 62a | 77 |
| மொத்தம் செய்யுள் ... | | 799 |
| II. சபா பருவம். | | |
| (1) இராசசூய யாகச் சருக்கம் ... ... | 70a | 155 |
| (2) சூதுச் சருக்கம் ... ... ... | 86a | 284 |
| மொத்தம் செய்யுள் ... | | 439 |
| III. ஆரண்ய பருவம்— | | |
| (1) தவநிலைச் சருக்கம் ... ... | 110a | 179 |
| (2) நிவாதகவசர் காலகேயர் வதச் சருக்கம். ... | 125a | 161 |
| (3) முண்டகச் சருக்கம் ... ... | 139a | 135 |

| | Fol. Number. | Total No. of Stanzas. |
|---|---|---|
| (4) மணிமா[ல]ன் வதைச் சருக்கம் ... | 151a | 139 |
| (5) அர்ச்சுனன் பூலோகத்திற்கு வரவு சருக்கம் ... ... ... | 161a | 7 |
| (6) தூர்வாசச் சருக்கம் ... ... | 162a | 18 |
| (7) பழம்பொருந்து சருக்கம் ... ... | 164a | 24 |
| (8) நச்சுப்பொய்கைச் சருக்கம் .. | 167a | 74 |
| மொத்தம் செயயுள் ... | | 737 |

IV. விராட பருவம்—

| | Fol. Number. | Total No. of Stanzas. |
|---|---|---|
| (1) அ[க்கிய](ஜ்ஞ)ாதவாசச் சருக்கம் | 174a | 38 |
| (2) மற்பொருது சருக்கம் ... ... | 177a | 14 |
| (3) கீசகன் வதைச் சருக்கம் ... ... | 178a | 104 |
| (4) நிரைமீட்சிச் சருக்கம் ... ... | 185a | 140 |
| (5) வெளிப்படு சருக்கம் ... ... | 196a | 35 |
| மொத்தம் செய்யுள் .. | | 331 |

V. உத்யோக பருவம்—

| | Fol. Number. | Total No. of Stanzas. |
|---|---|---|
| (1) உலூக மகாமுனி தூது சருக்கம் | 199a | 16 |
| (2) வாசுதேவனைப் படைத்துணை யழைத்த சருக்கம் ... ... ... | 200a | 21 |
| (3) சஞ்சயன் தூது சருக்கம் ... ... | 202a | 18 |
| (4) கிருஷ்ணன் தூது சருக்கம் ... ... | 204a | 262 |
| மொத்தம் செய்யுள் ... | | 317 |

VI. பீஷ்ம பருவம்—

| | Fol. Number. | Total No. of Stanzas. |
|---|---|---|
| (1) படையெழுச்சிச் சருக்கம் ... ... | 225a | 72 |
| (2) முதல்நாள் போர்ச் சருக்கம் ... | 231a | 78 |
| (3) இரண்டாநாள் போர்ச் சருக்கம் ... | 237a | 33 |
| (4) மூன்றாநாள் போர்ச் சருக்கம் ... | 240a | 30 |
| (5) நாலாநாள் போர்ச் சருக்கம் .. | 242a | 42 |
| (6) ஐந்தாநாள் போரச் சருக்கம் .. | 245a | 25 |
| (7) ஆறுநாள் போர்ச் சருக்கம் ... | 246a | 28 |
| (8) ஏழாநாள் போர்ச் சருக்கம் .. | 248a | 10 |

| | Fol. Number. | Total No. of Stanzas. |
|---|---|---|
| (9) எட்டாநாள் போர்ச் சருக்கம் ... | 249a | 39 |
| (10) ஒன்பதாநாள் போர்ச் சருக்கம் ... | 252a | 41 |
| (11) பத்தாநாள் போர்ச் சருக்கம் ... | 255a | 53 |
| மொத்தம் செய்யுள் .. | | 451 |

VII. துரோண பருவம்—

| | | |
|---|---|---|
| (1) பதினோராநாள் போர்ச் சருக்கம் ... | 260a | 45 |
| (2) பன்னிரண்டாநாள் போர்ச் சருக்கம் | 263a | 93 |
| (3) பதின்மூன்றாநாள் போர்ச் சருக்கம் .. | 271a | 261 |
| (4) பதினான்காநாள் போர்ச் சருக்கம் ... | 290a | 222 |
| (5) பதினைந்தாநாள் போர்ச் சருக்கம் ... | 308a | 51 |
| மொத்தம் செய்யுள் ... | | 672 |

VIII. கர்ண பருவம்—

| | | |
|---|---|---|
| (1) பதினாறாநாள் போர்ச் சருக்கம் ... | 312a | 92 |
| (2) பதினேழாநாள் போர்ச் சருக்கம் ... | 319a | 269 |
| மொத்தம் செய்யுள் | | 361 |

IX. சல்லிய பருவம்—X. சௌப்திக பருவம்—

| | | |
|---|---|---|
| (1) பதினெட்டாநாள் போர்ச் சருக்கம் | 340a | 242 |
| (2) மௌலிசூட்டு சருக்கம் ... ... | 363a | 54 |
| மொத்தம் செய்யுள் .. | | 296 |
| ஆக, பருவம் 10 க்கு, சருக்கம் 46 க்கு, பாயிரமுட்படச் செய்யுளின் மொத்தத் தொகை ... | | 4,424 |

(க-பு.)

இது, வில்லிபுத்தூராரால் இயற்றப்பட்டது; ஆதிபருவம் முதல் சௌப்திகபருவம் வரையிலுள்ளது. இந்தப் பிரதியில் இடையிடையே சில ஏடுகள் முறிந்துள்ளன. இந்தப் பிரதியின் இறுதியில் மௌலிசூட்டு சருக்கமென்று 51 செய்யுட்கள் எழுதப்பட்டு உள்ளன. இவை அச்சுப் பிரதிகளில் காணப்படவில்லை.

## No. 528. வில்லிபுத்தூரார் பாரதம்.
## VILLIPUTTŪRĀR BHĀRATAM.

Substance, palm-leaf. Size, 17½ × 1½ inches. Pages, 387. Lines, 8 on a page. Character, Tamil. Condition, slightly injured. Appearance, old.

Incomplete Contains four Parvas (from the Udyōga-parva to the Karṇaparva.)

Same work as the above.

(கு-பு.)—

இது முன்பிரதி போன்றது. இதில், 5-வதான உத்யோகபர்வமுதல் 8-வதான கர்ணபர்வம் வரையிலிருக்கிறது. ஏடுகள் கொஞ்சம் சிதிலம்.

---

## No. 529. வில்லிபுத்தூரார் பாரதம், பொழிப்புரையுடன்.

## VILLIPUTTŪRĀR BHĀRATAM WITH MEANING.

Substance, palm-leaf. Size, 15¼ × 1 inches. Pages, 454. Lines, 4 to 6 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Incomplete.

Contains the 4th Sarga of the Udyōga-parva dealing with the attempt made by Kṛṣṇa to effect a friendly compromise between the Kauravas and the Pāṇḍavas.

The author of the commentary is not known.

**Beginning:**

நீடாழி, etc.

* * * *

பேர்படைத்த விசயனுட [னு] (ன்மு) ம்மைநெடும்
பிறவியினும் பிரியா ஞகி [வ்] (ச்)
சீர்படைத்த கேண்மையினுற் றேருர்தற்
கிசைந்தருளுஞ் செங்கண் மா [லே] (லை)ப்
பார்படைத்த [கிரி] (சயோ) தனற்கு (ப்) படையெடே
னெனவமரிற் பணித்த கோலை (க்)
கார்படைத்த நிறத்தோனைக் கைதொழுவார்
பிறவாழிக் கரைகண்டாரே.

எ-து, பூலோகமெங்குஞ் சவுரியத்தினாலே பேர்பெற்ற அர்ச்சுன மகாராஜனுடனே மூன்று பிறப்பும் பி[றி](ரி)யாதபடியினாலே, கிரேதா யுகத்திலே இரணியவதை நிமித்[திய](த)மாக நரசிங்காவதாரமாக வந்தபொழுது இரணியன் குமாரன் பிரகலாதனாகவந்ததும், திரேதா யுகத்திலே இராவணவதை நிமித்[திய](த)மாக (இ)ராமாவதாரமாக வந்தபொழுது இராவணன் தம்பி விபீஷணனாக வந்ததும், துவாபர யுகத்திலே பூமிபாரந் தீர்ப்பதுகாரணமாக (க)கிருஷ்ணவதாரமாக வந்தபொழுது அர்ச்சுனனாக வந்ததும், இப்படி மூன்றவதாரத்திற்கும் பிரியாத காரணத்தினாலே, அர்ச்சுன[ரு](னு)க்கு ரதசாரதியாக இசைந்தருளிய ஸ்ரீகிருஷ்ணதேவனைத் (து)ரியோதனராஜன் வந்து வேண்டியபடியினாலே அந்த (ப்பாரத) யுத்தமுனையில் ஆயுதம் தம்முடைய அஸ்தத்திலே யெடுக்கவில்லையென்று உறுதிசொன்ன நாராயணசுவாமியை மேகவண்ணனைக் கைதொழுதபேர், பிறப்பிறப்பென்னுங் கடலை நீந்திக் கரைகண்டபேரென்றவாறு.

**End:**

> கண்ணனுங் குந்தி [தன்னுட னு] கனனேனுரைத்த
> கருத்தெலாங் கருத்துறக் கேட்[டு](டே)
> யெண்ணமு முடிந்த தெனமகிழ்ந் தருளி
> [நகைமை](மனைமை)(யி)லவிருந்த் (த்)
> தண்ணளி யுடனறவ பின்வரு திருமா
> தமனையு முறைமுறை திறந்திப்
> பண்ண[மா](மை) நடந்தோ மீதுமேற்கொண்டு
> பாண்டவ ரிருந்துழி யடைந்தான்.

(க-ப.)—

இது, உத்யோகபர்வத்தின் 4-வது சருக்கமாகிய கிருஷ்ணன் தூது சருக்கம். இதல் பொழிப்புரையுடனிருக்கிறது.

இது 160 பாடல்களை யுடையது.

---

## No. 530. வில்லிபுத்தூரார் பாரதம், பொழிப்புரையுடன்.

## VILLIPUTTŪRĀR BHĀRATAM WITH MEANING.

Substance, palm-leaf. Size, 16 × 1¾ inches. Pages, 31. Lines, 7 on a page. Character, Tamil. Condition, good. Appearance, not new.

Begins on fol. 1*a*. The other work herein is Aruṇācala-purāṇam 19*a*.

Contains only the Kaḻabbali Sarga which according to this manuscript includes the two previous Sargas found in the printed editions, viz , Paḍaiyelucci Sarga and Muhūrtamkēḻvi Sarga. The number of stanzas contained is 34.

Same as the above

## Beginning:

முகுந்தன் வாசகங் கேட்பதன முன்னமே முரசயர்த் தவனமுன்னி
ம்குர்தகோபமோடிக்கண முடிப்பன்யான வெம்பகைமுனியென்று(ந்)
தகுந்த ராஜிபர் தம்முட னிலையந்தவர் தமககும்வஞ் சமர்முனைப்
புகுந்த வாறெலாந் தூதரிற் போகமின் றேகியிற் பொறித்தம்மா.

## End:

ஆண்டகை கன்னி முன்[றே](ன)ரவய வ மனைத்து மீர்ந்து
காண்டக மலர்ந்த தீப மெனமுகங் கவி[னி](ன) நின்றன
பாண்டவர் [க்கி] யாம ளத்தின் படிபக டாதி யாக
வேண்டிய பலிக ளீ[த்](ந்) து வெனறியும் வேண்டி மீண்டா[ன்](ர்).

எ-து. வீராதி வீரனை[யி](வி)ருக்கிற அர்ச்சுனன் குமாரன் இராவா னுந் தன்னுடைய சரீரத்திலுண்டான முப்பத்திரண்டு அவயவங்களை ல்லாமரிந்து தலைமட்டும் விட்டு, காளிகாதேவிக்குக் கொடுத்துச் சற்றும் முகஞ் சுளிவில்லாமல் அனறலர்ந்த செந்தாமரைப்பூவைப்போலப் பிரகாசிக்கிறான. அதன்பின் பாண்டவர்யாவரும் நீதிசாஸ்திரப்படி யே தேவிக்குப் பூசைபண்ணி யெருமைக்[கி](க)டா முதலாகிய பலியுங் கொடுத்து, அம்மே! காளி! துர்க்கா! பரமேசுவரி! நாங்கள் சத்துரு வைச்[செ]சயிக்க வெற்றிதரவேணுமென்று வேண்டிக்கொண்டுவந் தார்களென்றவாறு. **34.**

## Colophon:

களப்பலிச்சருக்கம் முற்றும்.

ஸ்ரீராம[செ]ஜயம். இந்தச்சருக்கம் கலிவரதன் எழுதினது. ஈசுவர வருஷம் கார்த்திகைமீ 6வ வியாழக்கிழமை. ஸ்ரீ கிருஷ்ணதேவரு டைய பாதாரவிந்தமே [செ]கதி. களப்பலிச்சருக்கம்.

(க-பு.)—

இது, வில்லிபுத்தூரார்பாரதத்தி னோர்பகுதி; இராவானை யுத்த களத்தில் பலிகொடுத்ததைப்பற்றிக் கூறுவது; இந்தப்பிரதியில் பழைய பொழிப்புரையுடனிருக்கிறது.

## No. 531. பாரதம், மகாவிந்தம்.

## BHĀRATAM, MAHĀVINDAM.

Substance, palm-leaf. Size, 13 × 1⅛ inches. Pages, 592. Lines, 6 on a page. Character, Tamil. Condition, slightly injured. Appearance, old.

Complete.

A poem dealing with the concluding part of the life of the Pāṇḍavas, when they, disgusted with their earthly sovereignty, set out on their wonderful march to heaven, thinking that owing to the advent of the Kali age, it was undesirable for them to remain any longer on this earth.

**Beginning :**

பாண்டவ ரைவரும் பாரை யாண்டிடில்
[மீ](ஈ)ண்டிய கலியுக[ம்] பெயருங் காலமே
பூண்டிடு மகா[லெ]டரசுக் கோலக மேண்டிடில்
ஆண்டருள் விநாயக ரடிவ ணக்குவாம்.

* * * *

அருச்சுனன புத்திர னபிமன் றனனிட(ம்)
பரிப்புறு புதல்வனும் ப[ரிஷி](ரீக்ஷி)த் தானவன்
செருக்குட னளித்தசோர் செனமே[ச[ன](ய)னோர்
தருக்குடன் [ரூ](ரா)ச்சியந் தனனை யாண்டிடில். (1)

**End :**

மா[விட](லுடைப்) பாதர் தன்னை வணந்தினிர் தேடி யையவர்
கோலமாம் வைகுந் தத்தை(க) குறிப்புள பாதங் கண்டு
சீலமாம் பதத்தி லு[த்த](ற) செயல்லினை யுற்றத மாக
ஆலமே யுண்டான் மைந்த னருளினு லுரைசெய் தேனே. (94)

பாண்டவர் மகா[வெ]பந் தத்தை(ப்) பச்சைமால் பாதம பெ[த்த](ற்ற) [சொல்லை]
[யீ](ஈ)ண்டியே கற்றோர் கேட்போ ரியலுட னெழுதி(ச்) சே(ர்)த்தோர்
பூண்டதோர் பாவந்தவி(ப்) பூமியிற சுகித்து வாழ்ந்து
ஆண்டதோர் திருமால் பாத மருள் பெற்று வாழ்வர் தாமே. (95)

**Colophon :**

ராமலிங்கத்துணை. நளவருஷம், ஆடிமீ, [ரெ](இர)ண்டாந்தேதி, வியாழக்கிழமை யிந்த(ச்) சுபதினத்திலே மத்தூர்-கந்தப்ப முதலியார்

குமாரன் [தேவி] (தெய்வ)சிகாமணி முதலியாரவர் குமாரன், முருகப்ப முதலியார் மகா[ெ]பந்தம் எழுதி நிறைவேறது. [யி](இ)து எழுதின[ன](ந)ன்மை கருகுமணியப்பன் கையெழுத்து * * * * * முற்றும். ஆக விருத்தம் 1455.

(கு-பு.)—

இந்நூல், தருமபுத்திராதிகள் கலியுகம் பிறந்தவுடன் ஸ்வர்க்கஞ் சென்றதாகக் கதையை விரித்துக் கூறுவது. செய்யுள்நடை மிகத் தாழ்ந்தது. படிப்பில்லாத ஜனங்கள் படிப்பதற்காக யாரோ ஒருவரால் செய்யப்பட்டது. மகாபர்தம் என்னும் இந்நூலின் பெயர் மகாவிந்தம் என்று திரிந்ததுபோலும்.

---

## No. 532. பாரதம், மகாவிந்தம்.

## BHĀRATAM, MAHĀVINDAM.

Substance, palm-leaf. Size, 15½ × 1 inches. Pages, 426. Lines, 5 to 6 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Wants both beginning and end.

Same work as the above.

(கு-பு.)—

இது முன் பிரதியோன்றது. இதன் முதலில் 57 பாடல்களும், இறுதியில் 173 பாடல்களுமில்லை.

---

## No. 533. பாரதம்.

## BHĀRATAM.

Substance, palm-leaf. Size, 15 × 1¼ inches. Pages, 285. Lines, 5 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.

Contains only the Virāṭa-parva. The author of this poetical composition is not known. It contains the following five Sargas:—

1. அ[க்கியா](ஞ்ஞா)தவாசச் சருக்கம்.
2. மற்போருது சருக்கம்
3. கீசகன் வதைச் சருக்கம்.
4. நிரைமீட்சிச் சருக்கம்.
5. வெளிப்படு சருக்கம்.

**Beginning:**

திருமருவு மணிமார்பன் நாராயணன் கேசவன்
ஸ்ரீஹரி மாதவன் தேவகி நந்தனன்
மருவுமலர்ச் சிவஙகரன மகரி முகத்தோல
* * * *
பருவமன மக்கமரு ... நக முனிவன
பகர்ந்திட ... ளஙகுமகா பாரதகதையை
யொருகடின கோடுகொண் டெழுதிய விநாயக
ருபயமல ரடி தனைபரவ வு[ற](ர)ச மி முழுதும் வருமே.
* * * *
விருந்திறைச் சுதேயார் ... வர்கரு மாச ... தாறு
வருந்திபே வ... ம ... ாக மனனவன செய்த குற்றம்
திருநதபேவ ... ணி[டு]ரன் டாண்டு திரவே தொலைத்துப் பின்பு
குருகுல பாண்டு ஐவர் கோதையுமே மது செய்தார. (௪0)
ஆண்டக பணி[டு]ரன் டாண்டு வருவனர் [து](தொ)லைத்த பின்
மீண்டோர் வருஷ மின்று மேகி ... மறைந்து நாமும் [பு
பூண்டொரு வருஷ மாதி ( ) பரிந்திட வேணும் [னை](னா)மு(ங்)
காண்டிட ... ரனை ... காகளிக கருதினார் காயர் தானே.
சகக ... ரா னைம்பத் தாறு கனமுகந் தெச் தேசா தனனில
அகலியாத வாசம் பண்ண வாசிய தேசப பார்த்து
[யி](றி)க்கணை கதலி வாவென ... றனை ... வனுப்பும போது
தககவன ... மேற் கொண்டு தனைசெபன போன வாறே.

**End:**

... நசு[ம] ... நம ... த்தோ முமம நாய
காலமுங் கணக ... காவின்னை கையில் வேந்து
...வுமா திகரி சகருக காகமும் துறந்த தொ...
யாவரும் மருப வெளிப் போரபபு(ம) விட் டயோத்தி வந்தார்.

ஸ்ரீராம[ெ]ஜயம.

**Colophon:**

குடியாத்தம் பேட்டையிலிருக்கும் [வெள்ளாழ] (வேளாள)ரில் வழுதது ... யப்டன ... ராடபாவம் வெள்ளி யனறைகது எழுதி முடிந்தது. சிவப்ரகாசம் பிள்ளை சுக(வ)ஹு[ஸ்தகக்ஷரம்] (லிகிதம்).

(௩-பு.)—

இது, பாரதத்தின நான்காவது பருவமாகிய விராடபர்வம். செய்யுள் நடை மிகவும் தாழ்ந்தது. வில்லிபுத்தூரார், நல்லாப்பிள்ளை இவர்களியற்றியதில் இது சேர்ந்ததன்று. இதைச் செய்தவர் இன்னாரெனத் தெளிவாகத் தெரியவில்லை.

## No. 534. பாரதம்.

## BHĀRATAM.

Substance, palm-leaf. Size, 15¼ × 1¼ inches. Pages, 330. Lines, 7 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Begins on fol. 1a The other work herein is Vaidyam-marunduvahai (a work on medianis) 331 a.

The portion relating to the Bharata war only.

The author of this poetical composition is also not known. It is generally sung by Pūśāris (temple priests of the Śūdra caste) in temples dedicated to the worship of the Pāṇḍavas.

**Beginning:**

மாபா ரதமாக வந்த பெருங்கதையை
யாடாத ராயேன அறிந்தமதி யாரி
பாடுவதன் புலவோர் தங்களடி யாருடைய
சீர்பாத சேகரனைச் செப்ப முனைந்தானே.
* * * *
குணமிகுந்த மாயவனார் கூறிபா ரதமுடிகதில்
கணைமிகுந்த வர்ச்சுனருங் கனந்தநூரி யோதனரும்
துணை யொனறைத் தானதோர(த்) சொல்டனையைக் கூட்டியினி
யணிவகுப்பை யான்பாட வைங்கரனே முனனடவாய்.

**End:**

கோதையை வதையா வாறு கூறிடு மாலே யென்னில்
வேதரும் வியாசர் தன்னை மிகுத்தமால் நினைக்க வந்தார்
ஏதிலாத் தர்மர் போற்றி யிறந் திடுங் குருகு லத்தைப்
போதவே முன்னாள் வந்து புதல்வ ரளித்தா யென்றார். (35)
* * * *
கெற்பமுங் கரியா காதே கிளை[ந்](த்)துட னிருக்கு மாகில்
தப்புற வைவ ராவி தாங்கொள்ளு மல்லவ லென்னில்
ஒப்புடன் முன்னாள் . . . சள்குருபத்தி அழித்த கோவே
இப்பொழு திந்தமாது [யி](இ)றந்திடா வகைசெய் யென்றார். 37.

**Colophon:**

பத்தொன்பதாம் (?) நாள் உயுத்தம் முற்றும்.

(கு-பு.)

இது, பாரதத்தின் ஓர் பகுதி. பக ... ட்டல் முதல் பதினெட்டு நாள் யுத்தம் வரையிலிருக்கிறது. ... ர்தொறுமுள்ள தர்மராஜா கோவில்களில் பூசாரிகளால் பாடப்படுந் தாழ்ந்த நடையது. இலக்கண வழுக்களும் இதில்மிகஉள. இதையியற்றினவர் இன்னாரெனத் தெரியவில்லை.

## No. 535. அஷ்டாதசபுராணாதிவிஷயவிவரணம்

## ASTADAŚAPURĀNADIVISAYAVIVARANAM.

Substance, palm-leaf. Size, 13½ × 1½ inches. Pages, 108. Lines, 4 to 5 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Complete.

Gives a short summary of what is contained in each of the 18 Purānas known as Mahāpuranas, besides noting down the substance of certain Sanskrit poems and dramas and other works.

**Beginning:**

வியாச ரு(ஷ)ி ... ... ... ... ... ... வாயு ... ... ... தலை ... ... ... ... ... ... ... ... [ஏ] ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... வியாச ரு ... ... ... ... ... ... ... ... ... ... [ற]ு ... கோண ... ... ... ... ...

*   *   *   *   *

காருட புராணம் வியாச ரு(ஷ)ிலே உண் ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... கதைகளும், ... ... கதையும், ... ... ... ... ... ... அமிர்தம் ... ... ... கதையும், ... ... ... ... கதையும் ... ... ... ...

**End:**

தேசபாஷியம் — அதிலே கிருஷ்ணசுவாமி ... ... ... ... என்று சொல்லும் அவருடைய ... ... சொல்லும் சகல புவனத்துக்கு(ம்) ஆதிகாரண மென்று சொல்லும் அம[ற]்(ற)... ... சகலமாயிருக்[கு](ற) ... ... ...

(நாநா)[ற்](ர்)த்தமும், புல்லிங்க [ஸ்ரீ](ஸ்திரீ)லிங்கநபு(ம்)ஸகலிங்கமும் தெரியச் சொல்லும். [யி](இ)து [செயினி] (கசன)ஞலே பண்ணப்பட்டது. [யி](இ)து காண்டம் மூ[னு](ன்று.)

(கு-பு.)—

இது, 18 புராணங்களில் ஒவ்வொன்றின் விஷயத்தையும் சிறிது சிறிது கூறுவதுடன், காவியநாடகங்களிற் சிலவற்றின் விஷயங்கள் இன்ன என்பதையும் காட்டுகிறது; இதை எழுதியவர் இன்னாரென்று தெரியவில்லை. வசனநடை மிகத்தாழ்ந்தது; பிழைகளும் அதிகம்.

---

## No. 536. இலிங்கபுராணம்

## ILIṄGAPURĀṆAM.

Substance, palm-leaf. Size, 15¼ × 1¼ inches. Pages, 476. Lines, 8 or 9 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Complete.

It is divided into two parts, viz., the Pūrva-kāṇḍa and the Uttara-kāṇḍa corresponding to the Pūrvabhāga and the Uttarabhāga of the Liṅgapurāṇa in Sanskrit. The Sanskrit Purāṇa contains 106 Adhyāyas in the Pūrvabhāga and 55 Adhyāyas in the Uttarabhāga, while the Tamil Iliṅgapūrāṇa, though it contains the same number of Adhyāyas in the Pūrva-kāṇḍa, contains only 46 Adhyāyas in the Uttara-kāṇḍa. This work gives in 2,507 stanzas all that is contained in the Sanskrit Purāṇa closely following as far as possible the ideas and descriptions to be found therein. The author of the work is Kulaśēkhara-pāṇḍiyan.

**Beginning :**

பூர்வகாண்டம்.

கடவுள் வாழ்த்து.

பிறைதவழு மொழிசேருன் னப் பிறங்குகதிர் வெண்கோட்டாற்
செறிகதிர்செய் தடங்குவிச் செம்பொன்மால் வரைவாய்ப்ப
மறைபுகழுஞ் சவுந்தரிய வகரியின் வகுத்தெழுதும்
விறல்கெழுமு வேழமுகன் விரைமலர்த்தா ளிணைதொழுவாம்.

*　　*　　*　　*

(கு-பு.)—
இது முன்பிரதிபோன்றது. பூர்த்தியாகவுள்ளது. இந்தப்பிரதியில் சில ஏடுகள் சிதிலமாயுள்ளன.

---

## No. 538. உபதேசகாண்டம்.

## UPADÉŚAKĀṆḌAM.

Substance, palm-leaf. Size, 10 × 1⅜ inches. Pages, 639. Lines, 10 to 11 on each page. Character, Tamil. Condition, good. Appearance, very old.

Incomplete.

This work was written by Kōnēriyappa Mudaliar of Kāñcīpuram and forms a supplement to the Kandapurāṇam. See also the remarks in English and in Tamil relating to the work described under No. 540.

**Beginning**:

இம்ப ரியாவனென் கண்டிகை யாயிர மெடுத்து
நம்பு காதலிற் றரித்திடா நின்றனனொரு
மும்ப ரியாவரு மவனையே கண்டுநெக் குருகித்
தம்பு ராதியர் புகழ்சிவ னென்னவே தொழுவார்.

அன்றி யுஞ்சிரத் தொன்றுகா திணையிலவ் வாறு
துன்று நன்கா மீதிலெண் ணொன்கிரு தோளின்
மன்றல் கூரநா னொன்குநா னொன்கிரு மணிக்கட்
டென்று மாறிரண் டாறிரண் டணிந்துதேர் நிறைவன்.

**End**:

செப்புமப் படியே யுபதேச காண்டச் சிறப்பினைக் கேட்டிடு முடிவி
லிப்படி மறையோ ரனடி யார்கட் கனமளித் துளமகிழ்ந் திடுவா
ரிப்படி படிப்போர் கேட்பவ ரெல்லா மெழிற்குகன் பதம்பெறு வார்க
ளொப்பறு முனிகா ளென்றருள் சூத ருரைத்திடக் கேட்டுளங் களித்தே

* * * *

வாழ்கவேற் குமர னளினமென் மல[ற்](ர்த்)தாள் வையக முழுவதும் வாழ்க
வாழ்கமா மறையோர் மன்னவன் செங்கோல் வாழ்கமெய்த் தொண்டர்க ளெவலாம்
வாழ்கவெண் ணீறஞ் செழுத்து மெஞ் ஞான்று(ம்) வாழ்க[ன](ந)ற் கண்டிகை மாலை
வாழ்கவிங் ஙனஞ்சொ லுபதேச காண்ட மான்மியம் புவிவலம் வந்தே.

(ஐஉ)

கு-பு.—இந்நூல் கச்சியப்ப முதலியாரால் இயற்றப்பட்ட கந்தபுராணத்தைச் சார்ந்தது. எண்பத்தைந்து அத்தியாயங்களை உடையது. செய்யுளின் தொகை 4350. இந்தப் பிரதியில் முதலில் எண்பது பக்கங்களில்லையாதலால், இந்நூலின் முதல் பன்னிரண்டு அத்தியாயங்களும் பதின்மூன்றாமத்தியாயத்தின் முதற்பாடலும் இல் லை. இருபத்தேழாமத்தியாயமாகிய விரதமான்மியத்தில் ஐந்து பாட்டுகளே இப்பிரதியில் உள்ளன. மற்றவை எழுதப்படவில்லை.

---

## No. 539. உபதேசகாண்டம்.

## UPADEŚAKĀNDAM.

Substance, palm-leaf. Size, 16¾ × 1¼ inches. Pages, 523. Lines 8 on a page. Character, Tamil. Condition, slightly injured. Appearance, old.

Complete.

Same work as the above.

கு-பு.—[illegible]

## No. 540. கந்தபுராணம்.

## KANDAPURĀNAM.

Substance, palm-leaf. Size, 1[illegible] × 1¼ inches. Pages, 1,762. Lines 11-12 on a page. Character, Tamil. Condition, good. Appearance, old.

Complete in three volumes.

The names of the Paṭalas contained in each of the six Kāndas into which this work is divided and also the number of stanzas contained in each of these Paṭalas are given in the end.

The Kandapurāṇam treats of the birth and the exploits of the War-god Skanda or Subrahmaṇya.

The Sanskrit Skandapurāṇa is divided into six Samhitās, viz., (1) Sanatkumāra-samhitā, (2) Sūta-samhitā, (3) Brahma-samhitā, (4) Viṣṇu-samhitā, (5) Śankara-samhitā, (6) Sūrya-samhitā.

Of these the Śankara-samhitā is sub-divided into 12 Khaṇḍas. The first of these designated Śivarahasyakhaṇḍa is again sub-divided into seven Kāṇḍas, viz., Sambhavakāṇḍa,

Asurakāṇḍa, Mahēndrakāṇḍa, Yuddhakāṇḍa, Dēvakāṇḍa, Dakṣakāṇḍa, and Upadēśakāṇḍa. The subject-matter of the first six Kāṇḍas is dealt with under the same leadings in the Tamil Kāndapurāṇa. This work contains 10,346 stanzas, and its author is Kacciyappa Śivācāriyar, the son of Kālattiyappa Śivācāriyar who belonged to a family of temple priests attached to the temple of Kumarakōṭṭam in Kāñcīpuram. The Upadēśakāṇḍa which forms a supplement to the Kandapurāṇa has been separately treated in Tamil by one Kōnēriyappa Mudaliyār of Kāñcīpuram, a disciple of Kacciyappa Śivācāriyar. Vide MS. described under No. 538.

**Beginning :**

திகட சக்கரச் செம்முக மைந்துளான்
சகட சக்கரத் தாமரை நாயக
னகட சக்கர மின்மணி யாவுறை
விகட சக்கரன மெய்ப்பதம் போற்றுவாம்.

உச்சியின் மகுட மின்ன வொளிதரு நுதலி னோடை
வச்சிர மருப்பி னொறறை மணிகொளிம் புரிவ யங்க
மெய்ச்செவி கவரி தூங்க வேழமா முகங்கொண் டுற்ற
கச்சியில் விகட சக்[கிற](ர)கணபதிக கன்பு செய்வாம்.

இந்திர னாகிப் பார்மே லின்பமுற றினிதுமேவி(ச்)
சிந்தையி னினைந்த முற்றி(ச்) சிவகதி யதனிற சேர்வ
ரந்தமி லவுணா தங்க ளடல்கெட முனிந்த செவ்வேற்
கந்தவேள் புராணந் தன்னைக் காதலித் தோது வோரே.

**End :**

எந்தைகேண் மலரா னாதி யியம்பிய வமரர் யாரு
மந்தமின் முனிவா யாரு மாற்றல்வெஞ் சூரன் றனனால்
வெந்துய ருழந்து தொல்லை மேன்மையு மிழந்து தாழ
வந்தகா ரணமே தென்கொ லென்றனு மறையோன் சொல்
வான்.

விண்ணவ ராயி னோர்க்கு மேதகு முனிவர் யார்க்கு
மெண்ணயில் சூரன் றனனா லெயதிய தீமை யெல்லா
நண்ணலர் புரமூன் றட்ட நாதனை யன்றித் தக்கன
பண்ணிய மகத்திற் புக[குப்](க) பாவத்தால் விளைந்த தென்னை.

